தூத்துக்குடி.

# திருசங்கராமேச்சுரர் கோயில் வரலாறு.



கோயில் வெளியீடு

# சென்னை
# இந்துமதப் பாதுகாப்புக் கழகம்.

---

*தலைவர்:*

திவான்பகதூர் T. M. நாராயணசாமி பிள்ளை B. A., B. L.,

*கமிஷனர்கள்:*

இராவ்பகதூர்,

C. M. இராமச்சந்திரன் செட்டியார் B. A., B. L.,

A. S மன்னடி நாயர் B. A., B. L., *பார் அட்லா.*

B. V. கிருஷ்ண ராவ் B. A., B L.,

*செக்ரட்டரி:*

A. பாலகிருஷ்ண பிள்ளை B. A., B. L.,

*தூத்துக்குடிப்பகுதி*
*இன்ஸ்பெக்டர்:*

B. சுப்பிரமணிய முதலியார்,

உ

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

# தூத்துக்குடி,
# திரு சங்கரராமேச்சுரர் கோவில்
# வரலாறு.



எழுதியவர்:

**திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,**

*தமிழ் ஆசிரியர், சங்கரநயினார்கோவில்.*



வெளியிடுவோர்:

**ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை,**

*அறநிலைய ஆணையாளர்,*

**(Executive Officer)**

தூத்துக்குடி.

*ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், தென்காசி.*

1944

விலை அணா **8.**

திருச்சிற்றம்பலம்.

# முன்னுரை.

---

"பாண்டி நாடே பழம்பதி" என வாதவூரடிகளால் அருளிச்செய்யப்பெற்ற தென்பாண்டி நாட்டின்கண்ணி லங்கும் சிவத்தலங்கள் பலவற்றுள் இத் திருமந்திர சிவத்தலமும் ஒன்றாகும். எல்லாத் தலங்களினுடைய வரலாற்றையும் உலகறிய வெளியிடுதல் வேண்டும் என இந்து அறநிலையங்களின் பாதுகாப்புக் கழகத்தார் ஆணையின்படி இத் திருத்தல வரலாறும் வெளியிடப் பெற்றுள்ளது. இதனை ஆக்கியோர் எனது ஆருயிர் நண்பர் திருவாளர். இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்களாவார்கள். இவர்கள் தென் தமிழிலும், ஆங்கிலத்திலும் வல்லுநராயிருத்தலுடன் சோதிடக்கணிதத்திலும் வல்லுநராய் சுமார் முப்பதாண்டுகளாக சைவப் பஞ்சாங்கம் சிவாகமமுறையில் கணித்து வெளியிட்டு வருவது உலகறிந்த உண்மை. எனது நண்பரவர்கள் திருமந்திர நகராகிய தூத்துக்குடி பற்றி மேல்நாட்டார் வெளியிட்டுள்ள அறிக்கைகளை நன்கு ஆராய்ந்து இதன்கண் வெளியிட்டிருப்பதுடன் சிவாலய சம்பந்தமாய்க் கிடைத்துள்ள வரலாறுகளையும் தெள்ளத் தெளிய ஆராய்ந்து வெளியிட்டிருப்பது போற்றற்குரியது. அவற்றோடு திருமந்திர நகர்ச் சிவாலய ஆணையாளராய் அமர்ந்துள்ள திருவாளர். ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை யவர்களும் திருக்கோயிலின் அமைப்புக்களையும், திருக்கோயிலின் கண்ணுள்ள மூர்த்தங்களின் விளக்கங்களையும் நன்கு குறிப்பிட்டிருக்கின்றார்கள். அன்றியும் திருக்கோயிலின் சொத்து விபரம், வாகன முதலியனவைகளின் விபரங்களையும், வரவு, செலவு திட்டங்களையும் பொது மக்கள்

உணர்ந்து கொள்ளும்வண்ணம் தெளிவுபடுத்தி யிருப்பது மிகப் பயனுடையனவேயாகும்.

திருத்தல வரலாறுகளை வெளிடப்பணித்த இந்து அற நிலையப் பாதுகாப்புக் கழத்தாருக்கும், இவ்வரலாற்றை சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் முறையில் ஆக்கித் தந்த திருவாளர். இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கட்கும், திருக்கோயில் சம்பந்தமானவற்றை நன்கு வெளியிட்டுள்ள திருவாளர் ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளையவர்கட்கும் இந்நகர் சைவ மக்களின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தாரண ஆண்டு,
ஐப்பசித்திங்கள்
17-ம்நாள்

சித்தாந்த சைவர் திருவடித்தொழும்பன்,
**ந. சிவகுருநாதன்,**
தூத்துக்குடி.

உ

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

# பதிப்புரை.

கற்றதனால் ஆய பயன் என்கொல்வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் — திருக்குறள்.

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமு மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.

—மெய்கண்டார்.

உலகத்திலே காணப்படும் பொருள்களைக் கொண்டு காணப்படாத கடவுளை அறிகிறோம். உலகத்தில் காணப்படும் இயற்கைப்பொருள்கள் எல்லாம் கடவுளின் உடல்கள், அவன் அவைகளில் உயிராக நின்று உலகத்தை ஆட்டுவிக்கிறான். இந்த உண்மையை எல்லாச்சமயத்தாரைக் காட்டிலும் சிறப்பாக சைவ சமயத்தார் நன்கு உணர்ந்துள்ளார்கள். சைவ சமயம் எல்லாச் சமயத்தின் கொள்கைகளையும் ஏற்று அடக்கி அதற்கு மேலாக பல உயர்ந்த கொள்கைகளையும் உடையது. சைவ சமயம் ஏனைய சமயத்தார் கொள்கைகளையும் சமரச மனப்பான்மையோடு கொள்ளும் குறிக்கோள் உடையது. இதை சைவசமயத்தார்கள் கொண்டுள்ளார்கள் என்பதை

"யாதொரு தெய்வங்கண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்"

என்ற அருள்வாக்கால் அறிகிறோம். அதனால்எல்லாச் சமயங்களுக்கும் தாய்ச்சமயமாக விளங்குவது சைவ சமயமே ஆகும்.

சைவ சமயம், உலகு, உயிர், கடவுள், இருவினை, மறு பிறப்பு, ஆணவ மலம், உடல், ஐம்பொறிகள், ஐப்புலன்கள், கரணங்கள் இவைகளின் தத்துவங்களையும், பதி, பசு, பாச உண்மைகளையும் முறைமையே செவ்வன விளக்கும் தன்மையது. இந்த உண்மைகளை உணர்த்த திருவுருவ வழிபாடுகளும் திருக்கோவில்களும் உடையது.

ஆதலால், மக்கள் கற்பன கற்று அறிவன அறிந்து ஆலயங்களையும் அரனடியார்களையும் அரனெனக்கொண்டு மனமாசு நீக்கி மலர் சிலம்படி அடைதலே கற்றதின் பயன் என்று முன்னோர்கள் சொல்லியுள்ளார்கள். அவைகளின் உண்மையைப் பன்னிரு திருமுறைகளிலும் பதினான்கு சாத்திரங்களிலும் காணலாம்.

இவ்வளவு சீரும் சிறப்பும்பெற்றுள்ள சைவ சமயமும், தமிழும், முற்காலத்தில் தமிழ் மன்னர்களால் பேணப்பட்டும் வளர்க்கப்பட்டும் வந்தன. தற்காலத்தில் நம்மை ஆளும் அரசாங்கத்தார் வேற்றுச் சமயத்தைச் சார்ந்தவர்களாயிருப் பினும் இந்து சமயத்தைப்பேணிக்கொள்வதற்காக நம் மாகா ணத்தில் இந்துமத பாதுகாப்புக்கழகம் (Hindu Religious Endowments Board) என்று ஒன்று ஏற்படுத்தி அதில் நம்மவர்களை அங்கத்தினர்களாக நியமிக்கச் செய்யச் சட்டமும் ஏற்படுத்தியுள்ளார்கள்.

அந்தச்சட்டப்படி பல அறிஞர்கள் இந்துமதப் பாது காப்புக்கழகத்தில் தலைவர்களாகவும் உறுப்பினர்களாகவும் இருந்து பல நற்றொண்டுகள் செய்துள்ளார்கள். தற்சமயம் அந்தக் கழகத்திற்குத் தலைவராக விளங்குகிறவர்கள் திவான் பகதூர் T. M. நாராயணசாமிபிள்ளை அவர்கள். அன்னார் அறிஞர், பல நற்றொண்டுசெய்துவருகிறார். அன்னார் வாழ்க.

தற்சமயம் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள திருக் கோவில்களைப் பாதுகாத்து வருகிறவர்கள், முதல் கமிஷனர்

இராவ்சாகிப் C. M. இராமச்சந்திரன் செட்டியார் B. A. B L. அவர்கள். அன்னார் அறனறிந்த மூத்த அறிவுடையார். தமிழும் தெலுங்கும் ஆங்கிலமும் அறிந்த அறிஞர். சீமயப் புரட்சி செய்யும் வீரர். வீரர் வாழ்க. அப்பெரியாரைப்பற்றி திரு வி க. வாழ்க்கைக் குறிப்பில் " இராமச்சந்திரஞ்செட்டியார் ஒரு கலைக்கூடம். இத்தகைய கலைஞரை இந்து அறநிலையப் பாதுகாப்புக்கழகம் ஒரு கமிஷனராகப்பெற்றிருக்கிறது. அவர் சர்வாதிகாரம் பெற்றால் அவரது எண்ணம் ஈடேறுதல் கூடும். அதனால் நாட்டுக்கு நலன் விளையும்" என்று பொறித்துள்ளார்கள்.

திருவாளர் இராவ்சாகிப் C. M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் பல திருக்கோவில்களுக்கு ஸ்கீம் ஏற்படுத்தி கோவில் காரியங்கள் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்துள்ளார்கள். அந்த ஏற்பாட்டில் தூத்துக்குடி கோவிலும் ஒன்று. இந்த கோவிலுக்குப்பணி செய்ய என்னை 9–6–43 ல் நியமுகம் செய்துள்ளார்கள். 5-7-44ல் ஸ்கீமும் ஏற்படுத்தியுள்ளார்கள். பணியை ஒல்லும் வகை அறிஞர்கள் உதவி கொண்டு செய்துவருகிறேன்.

இனி தூத்துக்குடி நகரமானது சொல்லினும் லாபங் கொள்ளும்மரபினர்களான வணிகர்கள்நிறைந்த ஊர். இனியும் இவ்வூரில், எல்லா மக்களும் கற்பவை கற்றும், கேட்டுங் கேட்டவை கருத்துள் ஊறச், சொற்பொருள் நினைந்தும், கேட்போர்க்கு உணர்த்தியும் உள் துளக்கம் தீர்ந்து மெய்யறிவுபெற்று ஆனந்தவெள்ளத்தில்ஆழ்ந்துவாழ்கின்றவர்கள். இந்த ஜில்லாவில் உள்ள பொருளாளர்களில் பெரும் பொருளாளர் வாழுமூர். இந்த மாகாணத்தில் உள்ள எல்லாச்சபைகளுக்கும் தாய்ச்சபையாக 61 ஆண்டுகளாகத் தமிழையும், சைவ சித்தாந்தத்தையும், வளர்த்து வருகிற சைவ சித்தாந்த சபையுள்ள ஊர். இவ்வளவு பெருமைகளும் வாய்ந்த வணிகர்களும் அறிஞர்களும், பெரும்பொருளாளரும், பெரிய சபையும் இருப்பதால், இவ்வூர் திருக்கோவில் நவீனநாகரீகமுடையதாக

சுகாதாரமுடையதாக எல்லாக்கோவில்களுக்கும் எல்லாத் துறைகளிலும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இவ்வளவு நன்முறையால் அமைத்த அறிஞர்கள் எல்லோரும் வாழ்க. (கோவில் வரலாறு நூலின் உள் காண்க.)

இக்கோவில்வரலாற்றை எழுதி உதவியவர்கள் சென்னை மாகாணத்தமிழ்ச்சங்கத்தின் அமைச்சர் திருவாளர் இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்கள். அன்னார் தமிழ் நாட்டிற்கு செய்யும் தொண்டு மிகச்சிறந்தது. அன்னார் நற்றொண்டிற்கு தமிழ்மக்கள் என்றும் கடப்பாடுடையவர்கள். அன்னாருக்கு என் நன்றி உரித்தாகிறது.

வரலாற்றிற்கு நூல் சேகரித்துக்கொடுத்தும் தன் அனுபவத்தைச் சொல்லியும் நூல் விரைவில் வெளியிட ஊக்கமும் அளித்தவர்கள் இவ்வூர் சைவசித்தாந்த ஆசிரியர் திருவாளர் ந. சிவகுருநாதபிள்ளை அவர்கள். அன்னாருடைய அரும் பெரும் முயற்சியினாலேயே தூத்துக்குடி, அறிஞர்கள் உள்ளத்திலும், சமயப்பெரியார்கள் உள்ளத்திலும் இடம் பெற்றது என்று சொன்னால் மிகையாகாது. அன்னாரே சைவ சித்தாந்த சபையின் உயிர். அன்னாருக்கும் என் நன்றியைச் செலுத்திக்கொள்கிறேன்.

இந்நூலை வாங்கிப்படிக்கும் அறிஞர்கள் முழுமையும் படித்து முழுமுதற்கடவுளின் அருள் பெற ஆண்டவனை வழுத்துகிறேன்.

வாழ்க தமிழ் ! ஓங்குக சைவம்!

தூத்துக்குடி,
17-10-44

ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை,
அறநிலய ஆணையாளர்.

# திருக்கோவிலைப் பார்வையிட்ட அறிஞர்களின் உள்ளத்தில் எழுந்த உணர்ச்சிகள்.

(திரு. வி. கலியாணசுந்தர முதலியார், சென்னை.)

*திருமந்திர நகரத்தில் உயிர்கள் உய்ய எழுந்தருளியிருக்கும் பாகம்பிரியாள் சமேதராகிய சங்கர இராமேச்சுரர் திருக்கோயில் வழிபாடு செய்ய யான் போந்தபோது கண்ட காட்சிகள் பல. அவைகளுள் ஒன்று அறத்தலைவரின் அன்புப்பணியாகும். இத்தகை அறத்தலைவரே இந்நாளில் திருக்கோயில்களின் தொண்டுக்கு வேண்டற்பாலர். இந்து அற நிலயப்பாதுகாப்புக் கழகத்தார் தக்க ஒருவரை, இத் திருக்கோயிலுக்குத் தேர்ந்தெடுத்தது போற்றற்குரியது. திருமந்திர நகரின் சங்கர இராமேச்சுரர் திருக்கோயில் அறத் தலைவர் திரு. ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்களது பணியாற்றுந் திறமும், கல்வி, கேள்வி, ஆராய்ச்சியும், அன்பும், பிற நல்லியல்புகளும் ஒரு சிவாலயத்துக்குப் பயன் பட்டு வருதல் கண்டு மகிழ்வெய்தினேன். அவர் தம் பணியை அறநிலையப் பாதுகாப்புக்கழகத்தார் அடியவர் நல னுக்குப் பயன்படுத்திச் சிவநெறியை நன்முறையில் ஓம்பு மாறு ஆண்டவன் திருவருளை வழுத்துகிறேன்.*

*தூத்துக்குடி,* திரு. வி. க.
**15–3–44**

---

(திரு. மு. கதிரேசன் செட்டியார், அண்ணுமலைநகர்.)

*தூத்துக்குடி, ஸ்ரீ சங்கரராமேச்சுரர் பாகம்பிரியாள் தேவஸ்தான தருமகர்த்தா திரு. ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளையவர்களுடைய நிருவாக ஒழுங்கும், ஷை ஆலய கைங் கரியத்தில் மேற்கொண்டு நடத்திவரும் பேரன்பும் பாராட் டத்தக்கன. ஆலைய பரிபாலனத்திற்கு நல்ல தமிழ்க்கல்வியும்*

சைவ நூலாராய்ச்சியும், சைவ ஒழுக்கமும் உடையவர்களாக வும், சோர்வின்றி திருவாகத்தில் திறமையுடன் நடத்திவரும் தகுதி உடையவர்களாகவும் அமைவது போற்றத்தக்கது. இத்தகைய தகுதிகளெல்லாம் திரு. முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்களிடம் உள்ளன. திருக்கோயிலை மிகத்தூய்மை யாகவும், பார்க்கும் இடங்களிலெல்லாம் திருமுறை ஞாபகம் உண்டாகும்படியாகவும் இவர்கள் செய்திருக்கும் பணிகள் மனத்தை இன்புறுத்துகின்றன. சைவச் சொற்பொழிவு செய்யும் ஆற்றல் இவர்களிடம் உள்ளது. இத்தகைய அறி வும் ஒழுக்கமும் சிவபக்தியும் உடையார் அமைவது அரிது. இவர்களை இன்னும் பன்னெடுங்காலம் நிலைப்படுத்திப் பணி புரிந்து வரும்படி மேலதிகாரிகளும் திருவருளும் துணைபுரிக வென வழுத்துகிறேன்.

தூத்துக்குடி.
28-12-43

மு. கதிரேசன் செட்டியார்,
Hony. Advisor, Research Dept.
Annamalai University,
Annamalainagar.

---

(திரு. வி. சிதம்பரராமலிங்கம் பிள்ளை,
திருவாவடுதுறை ஆதீன வித்வான்.)

திருமந்திரநகரமென்னும் தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபையின் 60-வது ஆண்டு மணி விழாவிற்கு நான் வந்திருந்த பொழுது ஸ்ரீ பாகம்பிரியாள் சமேத ஸ்ரீ சங்கரராமேச்சுரப் பெருமானைத் தரிசிக்கச்சென்றேன். ஆலயத்தினுட்சென்ற தும், எங்கும் தமிழ் வேதம் கமழ்வது கண்டு உவகை யுற்றேன். ஆலய நிர்வாகம் செய்து வருகிறவர்கள் திரு. ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளையவர்கள் என்பது அப்பால் தெரிந்தேன். அவர்கள் திருக்குறள் முதலிய உயர்ந்த நூல் களில் நல்ல புலமை எய்தியிருப்பதுடன், சிவாலய கைங்கரி யத்தில் அவர்கள் திறம்பட ஈடுபட்டிருப்பது எனக்குக் கழி பேருவகை யூட்டியது. இத்தகைய தக்கார்கள் ஆலய நிர்வா கத்தில் அமர்ந்திருப்பது சைவவுலகிற்கு மிக்கபயனளிப்பது.

அவர்கள் சைவச்சொற்பொழிவும் ஆற்ற வல்லுநராயிருப்பது பெறற்கரிய தனிச் சிறப்பாகும். இவர்கள் இக்கைங்கரியத்தில் பன்னெடுங்காலம் ஈடுபட்டு நிலைத்துச் சிவாலய கைங்கரியம் செய்து வருமாறு அருள்புரிய எனது ஆத்மார்த்த பூஜா மூர்த்தியாகிய ஸ்ரீ காந்திமதியம்பா சமேத சாலி வாடீசப் பெருமானது உபய சரணாரவிந்தங்களையும் பணிந்து பிரார்த்திக்கிறேன்.

தூத்துக்குடி, — மு. சிதம்பரராமலிங்கம் பிள்ளை,
28—12—43 — திருவாவடுதுறை ஆதீனவித்துவான்.

( திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை )

திருமந்திரநகரத்தில் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் பாகம்பிரியாள் சமேதராகிய சங்கராமேச்சுரரை இன்று வழிபடப்போந்தேன். ஆலயமெங்கும் தூப்புரவும் உயர்உணர்ச்சியூட்டவல்ல சாதனங்கள் பலவும் புலனாயின. ஆலயத்தின் அகச்சுவர்களில் சைவ சமய பரமாச்சாரியார் முதலிய ஆன்றோர்களது அருள்வாக்குகள் அணிபெற எழுதப்பட்டுள்ளன. சைவத்திரு முறைகளின் ஒழுங்கினை நன்குணர்ந்தும், இன்னின்ன இடத்தில் இன்னின்ன திருப்பாடல்களைப்பொறித்தல் ஒப்புடைத்தாமென்றறிந்தும் இப்பணியினைச் செய்திருக்கும் அறிவும் அன்பும் பெரிதும் போற்றற்பாலன. பூசனையும் மிக ஒழுங்காக நடைபெற்று வருகின்றதென்று தோன்றுகிறது. இப்பகுதியில் வாழும் சைவமக்கள் பல்லோர் இவ்வாலயத்திற்குத்திரள் திரளாய் வந்து வழிபட்டின்புறுகின்றனர். சேக்கிழார் பெருமான் திருப்பெயர் கொண்ட நூல்நிலையமொன்றும் சின்னாள் முன்னர் தோற்றுவிக்கப்பட்டது. இன்னோரன்ன நலப்பாடுகள் தோன்றி மிளிர்தற்கு முக்கிய காரணராயிருப்பவர்கள் இத்திருக்கோயிலின் நிருவாகராகிய திருவாளர் ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளையவர்கள் என்று தெரிகின்றது. சமயப்பற்றும், நூலறிவும், வினைத்திறனும் ஒருங்கமைந்த இவர்களை இந்து அறநிலைய பாதுகாப்புக் கழகத்தார் தேர்ந்

தெடுத்து இத்திருப்பணிக் கமைத்தமை பெரிதும் பாராட்டத்தக்கது. பிற இடங்களில் இத்தகைய பணிக்கெனத் தேர்ந்தெடுக்கப்படுவோரும் இந்நற்பண்புகளையெல்லாம் உடையவர்களாயிருத்தல் மிக மிக அவசியம். அறிவுடைப்பெருமக்கள் பலர் வதியும் இந்நகரத்திற்குப்பேரணிகலமாய் விளங்கும் இவ்வாலயம் பல்வேறு சிக்கல்களிலகப்பட்டவக்காலிலும் இந்நூற்றாண்டு வாழ்க்கைக்கு வழிகாட்டியாய், உறுதுணையாய் நின்று அனைவர்க்கும் பெருநலம் பயக்க வேண்டும் என்று இறைவனை வழுத்துகிறேன்.

திருவாளர் பிள்ளையவர்கள் தாமே சமயச்சொற்பொழிவுகள் நிறம்படச்செய்தும், தக்க பிறரைக்கொண்டு செய்வித்தும் வந்துள்ளார்கள் என்றும் கேள்வியுற்று மிக்க மகிழ்ச்சியடைகின்றேன். இனி "வார வழிபாடும்" ஒழுங்காக நடைபெற ஏற்பாடு செய்யப் போவதாகக்கூறினார்கள். இஃதும் மிகப்பாராட்டக்கூடியதே.

தூத்துக்குடி, ச. சச்சிதானந்தம் பிள்ளை,
12-9-44 *District Educational Officer, Retd.*



சைவ சமய மக்களுக்குள்ள

# பன்னிரு திருமறைகள்.

| திருமறை எண் | பாடியோர்களின் திருப்பெயர் | பாடிய நூற்களின் பெயர் |
|---|---|---|
| 1, 2, 3 | திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் | தேவாரம் |
| 4, 5, 6, | திருநாவுக்கரசுசுவாமிகள் | தேவாரம் |
| 7 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | தேவாரம் |
| 8 | மாணிக்கவாசக சுவாமிகள் | திருவாசகம் |
| | | திருக்கோவையார் |
| 9 | திருமாளிகைத்தேவர் | திருவிசைப்பா |
| | சேந்தனார் | |
| | கருவூர்த்தேவர் | |
| | பூந்துருத்தி நம்பிகாடநம்பி | |
| | கண்டராதித்தர் | |
| | வேணாட்டடிகள் | |
| | திருவாலிய முதனார் | |
| | புருடோத்தம நம்பி | |
| | சேதிராயர் | |
| | சேந்தனார் | திருப்பல்லாண்டு |

| திருமறை எண் | பாடியோர்களின் திருப்பெயர் | பாடிய நூற்களின் பெயர் |
|---|---|---|
| 10 | திருமூலர் | திருமந்திரம் |
| 11 | திருவாலவாயுடையார் | திருமுகப்பாசுரம் |
| | காரைக்காலம்மையார் | திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் |
| | | திருவிரட்டைமணிமாலை |
| | | அற்புதத்திருவந்தாதி |
| | ஐயடிகள் காடவர்கோனயனர் | க்ஷேத்திரத்திருவெண்பா |
| | சேரமான்பெருமாணயனர் | பொன்வண்ணத்தந்தாதி |
| | | திருவாரூர் மும்மணிக்கோவை |
| | | திருக்கைலாய ஞான உலா |
| | நக்கீரதேவ நாயனர் | கைலைபாதி காளத்திபாதியந்தாதி |
| | | திருவீங்கோய்மலையெழுபது |
| | | திருவலஞ்சுழி மும்மணிக்கோவை |
| | | திருவெழுகூற்றிருக்கை |
| | | பெருந்தேவபாணி |
| | | கோபப்பிரசாதம் |
| | | காரெட்டு |
| | | போற்றித்திருக்கலிவெண்பா |
| | | திருமுருகாற்றுப்படை |
| | | திருக்கண்ணப்பதேவர் திருமறம் |

| | | |
|---|---|---|
| | கல்லாடதேவ நாயனார் | திருக்கண்ணப்பதேவர் திருமறம் |
| | கபிலதேவ நாயனார் | மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை<br>சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை<br>சிவபெருமான் திருவந்தாதி |
| | பரணதேவ நாயனார் | சிவபெருமான் திருவந்தாதி |
| | இளம்பெருமானடிகள் | சிவபெருமான் திருமும்மணிக்கோவை |
| | அதிராவடிகள் | மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை |
| | பட்டினத்துப்பிள்ளையார் | கோயினான்மணிமாலை<br>திருக்கழுமல மும்மணிக்கோவை<br>திருவிடைமருதூர் மும்மணிக்கோவை<br>திருவேகம்பமுடையார் திருவந்தாதி<br>திருவொற்றியூர் ஒருபா வொருபது |
| | நம்பியாண்டார் நம்பி | திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை<br>கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம்<br>திருத்தொண்டர் திருவந்தாதி<br>ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி<br>ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம்<br>ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை<br>ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை<br>ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்<br>ஆளுடையபிள்ளையார் திருத்தொகை.<br>திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை |
| 12 | சேக்கிழார்சுவாமிகள் | திருத்தொண்டர் புராணம் என்ற பெரியபுராணம் |

பண்புற்ற திருஞானசம்பந்தர் பதிகமுந்நூற்று
எண்பத்தி னான்கினால் இலங்குதிருமுறை மூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்
வண்பெற்ற முறைஒன்று நூற்றினால் வன்றொண்டர்

ஆகவளர் திருமுறை ஏழ் அருள்திருவாசக மொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமாம் முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள்

வைத்ததற்பின் நம்பிகழல் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
“சித்திதரும் இறைமொழிந்த திருமுகப்பாசுரம் முதலாம்
உய்த்த பதிகங்களையும் ஒருமுறையாச் செய்க” எனப்
பத்திதரும் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார்.

—உமாபதிசிவாச்சாரியார்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்ட சாத்திரம் என வழங்கும்

# பதினான்கு

# சித்தாந்த சாத்திரம்.

| எண் | நூற்பெயர் | ஆசிரியர் |
|---|---|---|
| 1 | சிவஞான போதம் | மெய்கண்ட தேவர் |
| 2 | சிவஞான சித்தியார் | அருணந்தி சிவாச்சாரியார் |
| 3 | இருபா இருபஃது | ,, |
| 4 | உண்மை விளக்கம் | திருவதிகை மனவாசகம் கடந்தார் |
| 5 | திருவுந்தியார் | திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார் |
| 6 | திருக்களிற்றுப்படியார் | திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் |
| 7 | சிவப்பிரகாசம் | கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார் |
| 8 | திருவருட்பயன் | ,, |
| 9 | வினா வெண்பா | ,, |
| 10 | போற்றிப் பஃறொடை | ,, |
| 11 | கொடிக்கவி | ,, |
| 12 | நெஞ்சு விடுதூது | ,, |
| 13 | உண்மை நெறிவிளக்கம் | சீர்காழித் தத்துவநாதர் |
| 14 | சங்கற்ப நிராகரணம் | உமாபதி சிவாச்சாரியார் |

உந்தி[1] களிறு[2] உயர்போதம்[3] சித்தியார்[4]
பிந்திருபா[5] உண்மை[6] பிரகாசம்[7] — வந்த அருட்[8]
பண்புவினா[9] போற்றி[10] கொடி[11] பாசமிலா நெஞ்சுவிடு[12]
உண்மைநெறி[13] சங்கற்ப[14] முற்று.

# சந்தானகுரவர் துதி

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த
மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க்கு அருள்புரிந்த
அருணந்தி நற்றாள் போற்றி
நீராண்ட கடந்தை நகர் மறைஞான
சம்பந்தர் நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி.



தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(படைத்தல். காத்தல். அழித்தல். மறைத்தல். அருளல்.)

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்ட தேவன் மெல்லடி வாழ்க.

# தூத்துக்குடி,
# திரு. சங்கரராமேச்சுரர் கோவில்
# வரலாறு.

---

### காப்பு.

*சங்கர ராமேச்சு வரனுர்தாம் சார்கோவில்*
*தங்கும் வரலாறு தானுரைக்க —தங்குமுறை*
*அம்மையிரு பாதம் அகமலரிற் கொண்டுள்ளோம்*
*எம்மையினி வெல்வார் எவர்?*

## க. இட அமைப்பு.

### கோவில் இருக்குமிடம், சில்லா, போக்குவரவு வசதி.

திருநெல்வேலி சில்லா சீவைகுண்டம் தாலூகாவில் கடற்கரையிலுள்ள மிகப் பெரிய துறைமுகப் பட்டினம், தூத்துக்குடி. இது தென்னிந்திய ரயில் வண்டித்தொடரின் முடிவிடம். சென்னையிலிருந்து 445 மைல் தூரத்தில் இருக்கிறது. அல்லாமலும் தென் திசையிலுள்ள பெரிய நகரங்களோடு மிக நல்ல சாலைகளாலே இணைக்கப் பெற்றுள்ளது. குறுக்குச்சாலை எட்டையபுரம் வழியாக கோவில் பட்டி, மதுரை, சங்கரன்கோவில்; குறுக்குச்சாலை ஓட்டப் பிடாரம் வழியாக மணியாச்சி, திருநெல்வேலி; குறுக்குச் சாலை குளததூர் வழியாக விளாத்திகுளம், நாகலாதபுரம்; குறுக்குச்சாலை எட்டையபுரம்வழியாக அறுப்புக்கோட்டை, மதுரை, (குறுக்குச்சாலை என்றபெயர் எவ்வளவு பொருத்தம் பாருங்கள்) வாகைக்குளம், முறப்பநாடு, வல்லநாடு வழியாக திருநெல்வேலி, வாகைக்குளம் ஸ்ரீவைகுண்டம் வழியாக திருநெல்வேலி, திருச்செந்தூருக்கு கற்சாலைகள் இருத்தலி ைலை அடிக்கடி இவ்வூர்களுக்கு வாடகை மோட்டார்

வண்டிகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. இவ்வூரிலிருந்து மேற்கே பத்தொன்பதாவது மைலில மணியாச்சி புகைவண்டி நிலையம் இருக்கிறது. அதிலிருந்து வடக்கே சென்னைக்கும் தென் மேற்கே திருநெல்வேலி வழியாக தென்காசிக்கும், கொல்லம், திருவனந்தபுரத்திற்கும், திருச்செந்தூருக்கும் ரயில் வண்டிகள் நாடோறும் பலமுறை போய்வருகின்றன. உலகத்திலேயே மிகச் சிறந்த துறைமுகங்களில் ஒன்ருகிய கொழும்புக்கும் இவ்வூருக்கும் அடிக்கடி கப்பல்கள் போய் வந்து கொண்டிருக்கினறபடியால் உலகத்தில் எப்பகுதிக்கும் கப்பல் வழியாகப் போகும் வசதியும், அரும் பொருள்களை ஏற்றுமதி இறக்குமதி செய்யும் வசதியும் இந்நகருக்கு இயல் பாகவே அமைந்துள்ளன.

இந்நகர் மேலூர், கீழூர் என இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. துறைமுகமும் கடற்கரைப் பகுதியும் கீழூர் எனப்படும். பெரும்பகுதியான மக்கள் குடியிருக்கும் இடம் மேலூர். கீழூரிலேதான் பெரிய ரயில் நிலையம் இருக்கிறது. இதிலிருந்து திருக்கோவில் மேற்கே ½ மைல் தூரத்திலிருக்கிறது. ரயிலடியில் எப்போதும் வாடகைக்கு குதிரை வண்டிகள் கிடைக்கும். சில ஆண்டுகளின் முன்னர் மேலூரிலும் சிறு ரயில் நிலையம் இருந்து வந்தது. அதி லிருந்து கோவில் 2 பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது.

கி. பி. 1700ல் இவ்வூர் இருந்த நிலையைப்பற்றி மார்ட்டின் பாதிரியார் பின்வருமாறு எழுதுகிருர்:- "கப்பலி லிருந்து பார்த்தால் தூத்துக்குடி மிகவும் அழகான நகரமாகக் காணப்படுகிறது. கடற்கரையில் பல அகலமான பண்ட சாலைகள் அருமையாகவும், அழகாகவும் தோன்றுகின்றன. ஆனுல், கரையில் இறங்கியவுடன் இந்த அழகெல்லாம் மறைந்துவிடுகிறது. மாட்டுத் தொழுவங்களினுலாகிய நகரே புலனுகிறது" —இந்த மாட்டுத் தொழுவங்கள் இன்றும் ஒன்றிரண்டு அங்குமிங்குமாக இருக்கின்றன.. ஆனுல் இப்போதுபெரியபெரியகடற்சுவர்களினுலாகியகட்டிடங்களாக

அவை மாறிவிட்டன. தொழுவங்களுக் குரிய கூரைகள் ஓடுகளாக மாறிவிட்டன. இன்றும் கடற்கரையி லிருக்கிற தெருக்களும் முடுக்குகளும் ஒடுக்கமானவைகளாகவும், கோணலாகவுமே இருக்கின்றன. பெரிய பருத்திச் சாலையே இந்நகரின் பெருந்தெரு. இதுநேராகவும், மற்ற ஊர்களிலுள்ளவைகளைக் காட்டிலும் மிகவும் அகலமானதாகவும் இருக்கிறது. அப்படி யிருந்தாலும் இதன்வழியாக போய் வரும் கூட்டத்திற்கு இடைஞ்சலாக யிருக்கிறது. பருத்தி பஞ்சு வண்டிகள் ஏராளமாக அவ்வழி வந்துகொண்டிருப்பதனாலேதான் இது 'பெரிய பருத்திச்சாலைத் தெரு' என அழைக்கப்படுகிறது போலும்!

கடற்கரையில் ஒரு மைல் நீளத்திற்கு அழகும், உறுதியும், உயரமும், பெருமையும் உள்ள கட்டிடங்கள், வேலை நிலையங்கள், மாளிகைகள் அணியணியாக விளங்குகின்றன. அன்று 1700ல் கப்பலில் வந்துகொண்டிருந்த மார்ட்டின் பாதிரியார் இன்று இத்துறைமுகத்தின் காட்சியைக் காணுதல் வேண்டும்! கடற்கரைச் சாலையும், ரயிலடிப் பக்கமுந்தான் இவ்வூரின் மொத்த வியாபாரத்துக்கெல்லாம் நடுவிடமாக உள்ளன. பெரிய பருத்திச்சாலை வீதியில் முதன்மையான கடைகளெல்லாம் அடங்கி யிருக்கின்றன. ரயில் நிலையத்திற்கு வடக்கே பலவகையான மக்கள் கூட்டங்கள் வாழ்கின்றனர். இதனுள்தான் வாடித்தெரு இருக்கிறது. இதுதான் இங்கே மக்கள் தங்கிய மிகப் பழமையான இடம். (வாடி - வேலி) தெற்கே பரவர்கள் மிகுதியாக வாழ்கின்றார்கள். ஊரின் வடக்கே முன் கலெக்டராகஇருந்த பக்கிள் துரையால் வெட்டப்பட்ட பக்கிள் கால்வாயும், அதற்கப்பால் மணல் திரடுகளும் உள்ளபடியால் நகரம் அப்பக்கமாக விரிவதற்கு வசதியில்லை. தெற்கே நீர்ப்பிடிப்பான பகுதி. கிழக்கிலோ கடலாயிற்று. மேற்கில் விரிவான இடமிருந்தாலும் வியாபாரத் துறைக்குத் தள்ளிப்போவதால் மக்களுக்கு கவர்ச்சியில்லாமல் இருக்கிறது. இருந்தாலும் இப்போது துணை நீதிமன்றங்கள் ஊருக்கு மேற்கே கட்டடம் பெற்றுவிட்டபடியாலும், வேறு போக்கில்லாமையாலும் மேற்குத் திசையே இவ்வூருக்கு

வளர்ச்சிக்குரிய இடமாகயிருக்கிறது. பெரிய ஆஸ்பத்திரி ஒன்றும் சர்க்காரால் இங்கேயே அமைக்கப்பெற்றுவருகிறது.

## மலை, ஆறு, குளம், தண்ணீர் வசதி.

அண்மையில் மலைகள் ஒன்றும் இல்லை. எங்கு பார்த்தாலும் முட்செடிகளும், பனைமரங்களும், செறிந்த மணற் பரப்புமே உள்ளன. இதற்கு தெற்கு ஒரு மைல் தூரத்தில் உப்பு ஓடை கடலில் விழுகிறது. இது ஓட்டப்பிடாரத்துக்கு மேற்கே தோன்றி பல இடங்களிலுள்ள மழை நீரை அள்ளிக்கொண்டு கோரம்பள்ளம் குளத்தின் வழியாகக் கடலை அடைகிறது. கோவிலின் வடகிழக்கில் ஒரு சிறு குளம் இருக்கிறது. இதில் வெளியிலிருந்து தண்ணீர் கோரி கொண்டுபோகப்படுகிறது. ஊருக்கு வடக்கே முன் கூறிய பக்கிள் ஓடை ஓடுகிறது. தண்ணீருக்கு இவ்வூரார் பட்ட பாடு சொல்லுந் தரத்ததன்று. தூத்துக்குடி என்ற திருப்பெயரே இதற்குப் போதுமான ஆதாரமாகும். கிணறுகள் எல்லாம் விரைவில் தண்ணீரில்லாமல் தூர்ந்துபோகும் தன்மையன. தூர்ததுத் தூர்த்துத்தான் தண்ணீர் குடிக்க வேண்டியதிருந்ததினால் இவ்வூர் தூர்த்துக்குடி என்று பெயர் பெற்று மருவி தூத்துக்குடியாயிற்று எனச் சிலர் கூறுகின்றனர். உப்பு ஊற்றுகள் ஊறுமல் கிணற்றின் தளத்தைக் கெட்டிசெய்து பின் அக்கிணற்றை நல்ல தண்ணீரினால் நிரப்பி வாளியினால் அதனை எடுத்துக் குடித்துவந்ததினாலும் இப்பெயர் வந்ததாகும். 1823ல் அச்சான சர்வே கணக்கின் படி அக்காலம் ஒரு குடம் தண்ணீர் 4 பைசாவாக விற்று வந்ததாம். அண்மையில் தாமிரபர்ணியிலிருந்து தண்ணீர் வரும் வரை எவ்வளவோ பாடு பட்டும் கோடை காலங்களில் மக்கள் தண்ணீருக்கு மிகவும் தவித்து வந்தார்கள். கிணறுகள் காய்ந்தோ, பொறுக்க முடியாத உப்பாகவோ போய்விடுமாதலால் பணக்காரர்கள் கொழும்பிலிருந்து குடி தண்ணீர் இறக்குமதி செய்துவந்தார்கள். 1846ல் சில ஐரோப்பிய வியாபாரிகள் நல்லஊற்றுக்களைக் காணும்பொருட்டு வெட்டிப் பார்த்ததில் இருபது அடிக்குக் கீழே வெள்ளைக் களிமண்ணும்

அதற்குக் கீழே ஐந்தடிவரை கருப்பு மண்ணும் மணலும் சரலும், இருபத்தைந்தாவது அடியில் பவளப் பாறையும் காணப்பட்டு இதுவரை உப்பாக இருந்த தண்ணீர் முப்பத்தோராவது அடியில் சிறிது மாறியதாகக் காணப்பெற்றது. வெட்டு நாற்பத்தி ஒன்று அடிவரை நடந்தது. அதன் கீழ் நல்ல தண்ணீர் இருக்குமென்பது வெட்டியான்களுடைய நம்பிக்கை. ஆனால் மேலிருந்த உப்பு நீரைத் தடுத்து அவ்வளவு ஆழததிற்குக் கிணற்றைக் கட்டுவது அவர்களுக்கு முடியாததாகத் தோன்றியதால் அச்சோதனை அத்துடன் நின்றது. அங்ஙனமே 1849-லும், 1851-லும் செய்தமுயற்சிகள் பயனற்றவையாயின. 1855ல்(District Engineer) ஆர்சிலே சீவைகுண்டத்தில் பெரிய அணை ஒன்று கட்டி வடக்கில் ஒரு கால்வாய் தூத்துக்குடி வரையிலும், தெற்கில் ஒன்று திருச்செந்தூர்வரையிலும் குடிதண்ணீருக்கும் நீர்ப்பாசனத்துக்குமாக வெட்ட திட்டமிட்டார். 1857ல் இத்திட்டம் மூன்று இலக்கத்து எண்பத்தையாயிரம் ரூபாய் செலவில் தொடங்கி 1874ல் முற்றுப்பெற்றது. 1874ல் பொருனைத் தண்ணீர் கால்வாய் வழியாக கோரம்பள்ளம் குளத்தைப் பெருக்கி ஐந்து மைல் நீளம் கால்வாய் வழியாக ஓடிவந்து தூத்துக்குடிக்கு வெளியே கட்டப்பட்டிருந்த தண்ணீர்த் தொட்டியை நிரப்பி குழாய்களின் வழியாக ஊருக்குள் சென்று பல கிணறுகளில் விழுந்து ஒருவாறு தண்ணீர்ப் பஞ்சத்தை நீக்கிற்று. 1905ல் ஓரிலக்கம் ரூபாய் சிலவில் கோரம்பள்ளத்திலிருந்து வந்த வாய்க்கால் கட்டுமானத்தால் மூடு வாய்க்காலாக மாறிற்று. என்ன செலவுகள் செய்தும் கோடை காலத்தில் தண்ணீர் தட்டுத் தோன்றிக்கொண்டே யிருந்தது. அதனால் 1914ல் பதினெட்டேகாலிலக்கம் ரூபாய் சிலவில் ஒரு திட்டம் வகுக்கப்பெற்று ஏற்றுக்கொள்ளப் பெற்றது. அதன்படி மருதூர் அணைக்கு இரண்டுமைல் கிழக்கே தள்ளி பொருனை யாற்றிலிருந்து வல்லநாட்டுக்குத் தண்ணீர் ஏற்றி அங்கிருந்து பதினெட்டு மைல் இரும்புக் குழாய் வழியாக தூத்துக்குடிக்கு கொண்டு வரவேண்டும். இத்திட்டம் பல சீர்திருத்தங்களோடு முற்றுப்பெற்றது. இப்போது வல்லநாடு

பொத்தைப் பக்கத்திலிருந்து நல்ல தண்ணீர் ஊர் முழுவதும் எளிதில் கிடைத்து வருகிறது. இதனால் இன்று தூத்துக்குடியில் ஏழை மக்கள் குடிப்பதும் குளிப்பதும், பொருநைத் தண்ணீர்தான்.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்." (திருவள்ளுவர்)

## மக்கள் தொகை, வெப்ப நிலை, தங்கும் இடவசதிகள், பிற சிறப்புக்கள்.

1911ல் 40185ஆக இருந்த இவ்வூர் மக்கள் தொகை 1941ல் ஆண் 38262 — 37352 பெண், ஆக மொத்தம் 75614 ஆக கிட்டத்தட்ட இரட்டித்து விளங்குகின்றது. இவ்வூர் ஒரு நகராட்சி. இதில் 24 பகுதிகளோடு கூடிய 17953 வீடுகள் இருக்கின்றன. இங்ஙனமாக முப்பது ஆண்டுகளில் இரட்டித்துள்ள இத்தொகை இவ்வூர் எவ்வளவு விரைவாக வளர்ந்தோங்கி வருகிறதென்பதைத் தெளிவு படுத்துகின்றது. இது கொடிய வெப்பமுள்ள ஊராக இருந்தாலும் கடற்கரைப் பட்டினமானதால் உடலுக்கு நன்மை தரும் கடற் காற்றும், அடிக்கடி பெய்யும் மழையும் ஏராளமாகக் கிடைக்கும். பொருள் வருவாயும், இப்போது தோன்றியுள்ள தண்ணீர் வசதியும் குடியிருப்பை மிகவும் வசதியாக்குகின்றன. கோவில் வாசலில் நகராட்சியினருடைய ஆளுகையிலுள்ள பெரிய சத்திரம் ஒன்று இருக்கிறது. இதனுள் கல் திருமடம் இருக்கிறது. அதன் அமைப்பைப் பார்த்தால் அது ஏதாவது ஒரு சைவ ஆதீனத்தைச் சேர்ந்ததாக இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. நாட்டாண்மைக் கழகத்தார் ஆட்சியிலுள்ள வழிப்போக்கர் விடுதி (Traveller's Bungalow) ஒன்று கடற்கரையி லிருக்கிறது. தங்கும் இடவசதியுடன் ரயிலடியில் ஒரு சைவச் சாப்பாடு விடுதி நெடுங்காலமாக பல வசதிகளுடன் இருந்துவருகிறது.

இவ்வூர் சீவைகுண்டம், திருச்செந்தூர் ஆகிய இரண்டு தாலூகாக்களுக்கும் தலைவராகிய சப் கலெக்டர் இருக்கும் தலைமை இடம். அதுபோலவே, போலீசு உதவி ஆட்சியாக (Assistant Superintendent of Police)யிருக்கும் தலைமைஇடம். துணை நீதிபதி (Sub-judge) ஒருவரும் இருக்கிறார். பொருள் நீதிபதி (District Munsif) யும் துணைத் தாசில்தாரும் உளர். பெரிய வைத்தியசாலையும், பெரிய அஞ்சல் நிலையமும், பதிவு நிலைய (Sub-Registrar office) மும் இருக்கின்றன. நகராட்சி (Municipality) யினால் இவ்வூர் பல நலன்களையும் அடைந்து வருகின்றது. இக்கழகத்தார் பல ஆரம்ப பள்ளிக்கூடங்களை நடத்தி வருகின்றனர். கால்டுவெல் உயர்நிலைப் பள்ளி, (ஒரு காலத்தில் இது கலாசாலையாக இருந்தது.) சேவியர் உயர் நிலைப்பள்ளி, இந்து உயர்நிலைப் பள்ளி (சரஸ்வதி ஆங்கிலோ வெர்னகுலர் (S. A. V. High School) மிகப்பழைமையான ஹைஸ்கூல். சி. வ. நடுநிலைப்பள்ளி, பெண்கள் நடுநிலைப் பள்ளி இன்னும் பெரிய ஆண், பெண் ஆரம்பப் பள்ளிகள் நிரம்பி யிருத்தலின் கல்வி முட்டின்றி வளர்கின்றது.

## துறைமுகம்.

வியாபார உலகத்தில் தூத்துக்குடி முதன்மையான வரலாறு ஒரு நூற்றாண்டையது. இவ்வளவு விரைவில் முதன்மை பெற்ற துறைமுகம் இந்தியாவில பிறிதொன்று மில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஒரு சில நூறு ரூபாய்களுக்கே கடல் வாணிபம் நடந்து வந்தது. அக்காலத்து காயல்பட்டினமும், குலசேகரன் பட்டினமும் மிகச் சிறந்து விளங்கின. சென்னைக்கு கருப்புக்கட்டியும், கொழும்புக்குத் துணியும் ஏற்றிச் சென்றுவந்த பதினாறு கப்பல்கள் இந்தச் சில்லாவில் இருந்தன. ஆண்டுக்கு மூன்று நான்குஇலக்க ரூபாய் விலைமதிப்புள்ள துணிகள் சென்னைக்கு காயலபட்டினத்திலிருந்து ஏற்றுமதியாயின. கடல்வழிகளில் தூத்துக்குடியும் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப் பெற்றமையே இதன் காரணம். 1842, 1879, 1912-ம் ஆண்டுகளில் இத் துறைமுகம் அளந்து குறியிடப்பெற்றது. 1842ல் பழைய

டச்சுக்காரருடைய சதுரத் தூண் விளக்குக்குப் பதிலாக சரியாக கலங்கரை விளக்கொன்று ஏற்றப்பெற்றது. இப்போதுள்ள விளக்கு 1874ல் மாற்றியமைக்கப்பெற்றது. தூத்துக்குடி திடீரெனறு முதன்மைபெறத் தொடங்கிற்று. சீனுவிற்கும் இங்கிலாந்திற்கும் சென்ற பஞ்சு முழுவதும இங்கிருந்து சென்றன. 1851-க்கும், 1861-க்கும் இடையில் தூத்துக்குடிக்கு உள் நாடுகளிலிருந்து சரியான கற்சாலைகள் போடப்பெற்றன. 1876ல் ரயிலும் வந்துவிட்டது. சென்னையிற் பாதிக்கு மேல் இங்கு வாணிபம் நடைபெறுகிறது. பஞ்சு, சப்பான், இங்கிலாந்து, செர்மனிக்கும், நூல் சீனுவுக்கும், நிலவாகை இங்கிலாந்துக்கும், செர்மனிக்கும், தேயிலை ஐரோப்பா, ஆசுத்திரேலியா, அமெரிக்காவிற்கும், துணிகள் தென்னுப்பிரிக்கா, இலங்கைக்கும், காப்பிக் கொட்டை இங்கிலாந்துக்கும்; ஆடு, மாடுகள், மிளகாய், ஈருள்ளி, அரிசி, தான்யங்கள் இலங்கைக்கும் ஏற்றுமதியாகின்றன. துணிகள், தீப்பெட்டி, மண்ணெண்ணெய், சில்லரைச்சாமான்கள் இறக்குமதியாகின்றன. இதனுல் சென்னை மாகாணத்தில் இது இரண்டாவது துறைமுகமாகவும், இந்தியாவிலே ஐந்தாவதாகவும் மதிக்கப்பெற்று வருகின்றது.

இலங்கைக்குப் போகும் கூலிகள் பத்து மைல் தூரத்துக்கு மேற்கேயுள்ள தட்டப்பாறையில் மருத்துவக் கண்காப்பில் சில நாட்கள் தங்கியிருந்து கப்பலில் போகின்றனர். கப்பல் துறைப் பாலம் 1895ல் போடப்பெற்றது. 1899ல் ரயில், துறைமுக மேடைக்கே வந்துவிட்டது. நகருக்குத் தெற்கிலிருந்து தொடர்பான மூன்று தீவுகள், புன்னையடி, ரோஞ்சி, பாண்டியன் (முயல்) தீவு என்பன வடகிழக்கு சாயலாகக் கடலுள் நீண்டு போகின்றன. முயல் தீவுக்கு ஒரு மைல் வடக்கே தூத்துக்குடியைப் பார்த்து வடமேற்காக விரிந்திருக்கும் பாறைத் திரடொன்று உளது. இந்த வளைந்துள்ள தீவுத் தொடரின் உள்ளேதான் துறைமுகம் இருக்கிறது. இதில் கரையையடுத்து வரும் சிறு மரக்கலங்கள் எட்டு ஒன்பதடி ஆழத்தில் காவலுடன் இருக்கின்றன. கடலோடும் பெரிய கப்பல்கள் நகரிலிருந்து ஐந்தாவது மைல்

களுக்கப்பால் முயல் தீவுக்கு வெளியேயுள்ள துறையில் தங்குகின்றன. புன்னையடித்தீவும் ரோஞ்சிதீவும் எப்போதும் ஒன்று சேர்ந்துள்ளன. புன்னையடித் தீவுக்கும் கரைக்கும் இடையே யிருந்த பதினாறடி யாழமுள்ள இடை தூர்க்கப் பட்டதிலிருந்து அவை பெருந் தடியோடு இணைக்கப் பட்டன. ஐரோப்பாவுக்குப் போகும் பெரிய கப்பல்களெல்லாம் இங்கு வந்தே போகின்றன. ஆங்கில இந்திய புகைக் கப்பல் கம்பேனியார் கப்பல்கள் கொழும்புக்குப் போய் வருகின்றன. இங்கேதான் தேசாபிமானச்செல்வர் திருவாளர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களுடைய நன் முயற்சியால் சுதேசிக் கப்பல்கம்பேனி (The Swadeshi Steam Navigation Company) ஒன்று நிறுவப்பட்டு சிலகாலம் இலங்கைக்குப் போய் வந்தன. இங்கே பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை முத்து சலாபம் நடைபெறுகின்றது. அருமையான முத்துக்கள் இப்பக்கத்தில் விளைகின்றன. தூத்துக்குடியிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள தொள்ளாயிரம் பாறையும், புன்னைக் காயலிலிருந்து ஆறுமைல் தூரத்தில் கிழக்கேயுள்ள கூடுமுத்துப் பாறையும் நல்ல முத்துக்கள் விளைவுள்ளனவாகத் தீர்மானிக்கப் பெற்றுள்ளன.

## ஊர் வரலாறு.

பண்டைக் காலத்தில் தூத்துக்குடி பரவர்கள் வாழ்ந்து வந்த மிகச்சிறிய பட்டியாக இருந்தது. போர்த்துக்கீசியர்கள் இந்தியாவிலே வந்து குடியேறி யிருந்தார்கள். அவர்களுக்கு கிழக்குக் கரையில் தலைநகரமாக இருந்தது புன்னைக்காயல். அதனை விட்டுவிட்டுத் தூத்துக்குடிக்கு வந்துவிட்டார்களென்றால் அதில் எத்தனை வசதிகண்டு அவர்கள் வந்திருக்க வேண்டும்? மகமதியர்களாலே கொடுமைப் படுத்தப்பட்ட பரவர்களை பாதுகாப்பதற்காகக் கொச்சியிலிருந்து புறப்பட்டுவந்த போர்த்துக்கீசியருடைய படகுகள் 1532ல்முதன் முதலாக தூத்துக்குடிக் கரைக்கு வந்துசேர்ந்தன பரவர்கள் கிருத்தவர்களாக மாற்றப்பெற்றார்கள். அதனால் போர்த்துக்கீசியருடைய செல்வாக்கு நிலைபெற்றது. 1543-க்குள்

போர்த்துக்கீசியர் கவர்னர் ஒருவர் தூத்துக்குடியில் இருந்தார். அர்ச் சவேரியார் என்ற பெரியார் 1544ல் எழுதிய கடிதம் விசயநகரம் மன்னருடைய ஆட்களும், மதுரையிலிருந்த அவர்களுடைய சிற்றரசராகிய நாயக்கரும், தூத்துக்குடியைத் தாக்கிய விவரத்தைத் தெரிவிக்கிறது. கவர்னருடைய கப்பல் எரிக்கப்பட்டது; வீடு அழிக்கப்பட்டது; அவர் தீவுகளில் ஓடி ஒளிந்தார். போர்த்துக்கீசியர் இருந்ததற்கு வியப்பான அடையாளமாக ஒரு கல்லறைக் கல் இருக்கிறது. அதில் 1618 திசம்பர் மாசம் 2உ யிட்ட தமிழ்க் கல்வெட்டு உள்ளது. ஒரு ஐரோப்பியர்பற்றி தமிழ்க் கல்வெட்டு இதுதான் முதலாவது. இது ஆங்கிலேயர் கோவிலில் வைக்கப் பெற்றுள்ளது. 1602ல் முதன் முதலாக டச்சுக்காரர்கள் இலங்கையில் வந்து சேர்ந்தனர். அவர்கள் பதினேழாம் நூற்றுண்டின் முதற்பகுதியில் அடிக்கடி போர்த்துக்கீசியருடன் போர் தொடுத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் 1658ல் ஒரு கடற்படையோடு தூத்துக்குடி துறைமுகத்தில் நுழைந்து அதனைக் கைப்பற்றினர். 1784 வரை அவ்வூர் அவர்களிடம் இருந்து வந்தது. அவர்களுக்குச் சொந்தமான ஊர்கள் இந்தச் சில்லாவில் வேம்பார், வைப்பாறு, புன்னைக்காயல், பழையகாயல், காயல்பட்டினம், மணற்பாடு, ஆழ்வார் திருநகரி என்பன. இப்பகுதிக்கு தலைநகராகிய தூத்துக்குடியில் அவர்கள் ஒரு சிறு கோட்டை கட்டினார்கள். முன்னூறு அடி சதுரமானது. அவர்கள் பரவர்களோடு நட்புக்கொண்டு மீன், முத்துப்பண்ணைகளைக் கைப்பற்றி பாதுகாப்புக்காக பாம்பனிலிருந்து கன்னியாகுமரி வரை கடற்படையை அமைத்திருந்தார்கள். 1700ல் மார்ட்டின் பாதிரியார் பின் வருமாறு எழுதுகிறார்:- "முழுஉரிமை உடையவராக இல்லாதிருந்தும் டச்சுக்காரர் தூத்துக்குடியிலிருந்து ஏராளமான வருவாய் பெற்றார்கள்" துணி வணிகத்தில் முதன்மைபெற்று அவர்கள் நாளடைவில் அப்பக்கம்வரும் கப்பல்களில் துணிக்குச்சுங்கம் வாங்க தலைப்பட்டார்கள். உள்நாட்டில் பல ஊர்களில் அவர்களுக்குத் துணி நெய்துதந்த தொழிலாளர் பலர் இருந்தனர். 1760ல் ஒரு பெரிய டச்சுப்படை தூத்துக்குடியிலும் மணற்

பாட்டிலும் வந்து இறங்கினர். மகமது யூசுபூ என்ற மகமதிய படைத் தலைவர் அது கண்டு சினம் கொண்டு படையுடன் ஆழ்வார்திருநகரியை நோக்கிச் சென்றார். அப்படைகள் உடன் போய்விட்டன. பாளையங்கோட்டையிலிருந்த ஆங் கிலப் படைத்தலைவர் தூத்துக்குடியை பிடித்துக்கொண்டார். 1783ல் சமாதானம் ஏற்பட அதன்பலனாக 1785ல் தூத்துக் குடி மறுபடி டச்சுக்காரரிடம் போயிற்று. 1792ல் சென்னை அரசாங்கத்தார் திருநெல்வேலி ஜில்லாவின் ஆளுகையை மேற்கொண்டவுடன் தூத்துக்குடியையும் பிற டச்சுக்காரர் இடங்களையும் கைப்பற்றிக் கொண்டார்கள். 1818 வரை தூத்துக்குடி ஆங்கிலேயரிடம் இருந்தது. 1801ல் டச்சுக் காரருடைய தூண்டுதலால் பாஞ்சாலங்குறிச்சியார் தூத்துக் குடியைப் பிடித்து அங்கிருந்த ஆங்கிலேயரை துன்புறுத்தி னார்கள். ஆனால் ஆங்கிலேயர்கள் விரைவில் அதனை மீட்டி விட்டார்கள். டச்சுக் கோட்டை பாழாகி தலை கீழாகத் தொங்கும் வௌவால்களுக்கு வாழும்இடமாயிருந்து 1810ல் தரைமட்டமாக்கப்பட்டது.

1818ல் ஐரோப்பாவில் ஏற்பட்ட சில மாறுதல்களின் பயனாக தூத்துக்குடி, புன்னைக்காயல், காயல்பட்டினம், ஆழ்வார்திருநகரி, பாண்டித் தீவு, குரோஞ்சித் தீவு இவை டச்சுக்காரரிடம் 1818 மேமீ 11உ கொடுக்கப்பட்டன. முயல்தீவு எனப்படும் பாண்டித்தீவில் டச்சுக்காரர் கப்பல் களுக்காக ஒரு விளக்குத்தூண் நிறுத்தியிருந்தனர். அவர்கள் அமைத்திருந்த சிறைச்சாலைகள்போன்ற சில அடையாளங் கள் குரோஞ்சித் தீவில் இப்போதும் காணப்படுகின்றன. அப்போது வந்த உரிமை யாராய்ச்சிக் கழகத்தினர் டச்சுக் காரர்களுக்கு அவர்களுடைய கோட்டை யிருந்த இடம் மட்டுமே சொந்தம் எனவும், உப்பளங்களில் உரிமை இல்லை என்றும், ஒருவகை சிவப்புச் சாயம் இறக்கக்கூடிய சாயவேர் என்ற செடிகளைச்சேகரிப்பதை ஏலம் விடும் முறைமை அவர் களுக்குக் கிடையாது என்றும் அக்கழகம் முடிவு செய்தது. அப்போது தூத்துக்குடி என்பது பரவர்கள் குடியிருக் கும் இடமும், ஆங்கிலேயர் கோவிலுக்கு வடபுறம் உள்ள

கீழ்ருமையாகும். 1819ல் டச்சுக்காரர்கள் பரவர்களுடைய தலைவரை கைக்குள் போட்டு மீன் பண்ணைகளைக் கைப்பற்றி தொல்லை விளைவித்தனர். புன்னைக் காயலிலிருந்த ஆங்கில அதிகாரி கலெக்டருக்கு எழுதிய கடிதத்திலிருந்து சாதித் தலைவர்கள் நாவிதர்களை ஆங்கிலேயருக்கு சவரம் செய்வதைக் கூடக் கூடாதெனக் கட்டுப்படுத்தி இடையூறு செய்தார்கள் என்று தெரிகிறது. கடைசியாக எல்லாத் தொல்லைகளும் நீங்கி 1825 ஜூன்மீ 1உ யன்று தூத்துக்குடி ஆங்கிலேயருடைய முழு ஆளுகையில் வந்து சேர்ந்தது.

## உ. கோவில்.

### கோவிலின் தோற்றம், அகல நீளம்.

தூத்துக்குடி மேலூரின் நடுவே மிகவும் அழகாக விளங்குகின்றது திருக்கோவில்.

### கோவிலின் பகுதிகள், சுற்றுக்கள், மூர்த்திகள்.

இத்திருக்கோவிலின் கருப்பக் கிரகத்திலே திரு. சங்கர ராமேச்சுரப் பெருமான் சிவலிங்கத் திருவுருவத்துடன் எழுந்தருளி யிருக்கின்றனர். அர்த்த மண்டபத்திலே பள்ளி யறைச் சொக்கர் அமர்ந்துள்ளார். மகா மண்டபத்திலே பிள்ளையாரும், முருகரும், நந்தியெம்பெருமானும், வாயில் காவலர் இருவரும் கல் திருவுருவத்திலுள்ளனர். பின் வருகிற பெருமான்களுடைய செப்புத் திருவுருவங்களு மிருக்கின்றன:— அத்திரதேவர், பிரியாவிடையாளுடன் சங்கர ராமேச்சுரமூர்த்தி, பாகம்பிரியாள், அத்திரதேவி, பிள்ளையார், முருகவேள், வள்ளியம்மை, தெய்வயானை, சந்திரசேகரர், மனோன்மணி தேவியார், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசக அடிகள், சேரமான்பெருமான், சண்டேசுவரர், மாதா அம்மை, கங்காளநாதர், சேக்கிழார் பெருமான், கூத்தப்பிரான், சிவகாமியம்மை, சீபலிநாயகர்.

இம்மாமண்டபத்தில் பாகம்பிரியாள் அம்மை திருக்கோவில் கருப்பக்கிரகம், அர்த்த மண்டபத்துடன் விளங்குகின்றது. அம்மை கோவில் மாமண்டபமும் இதுவே. இது சென்று நின்று வழிபடுவோருடைய உள்ளத்தை அன்பு ததும்பச் செய்யும் அமைப்பினது. கருப்ப கிரகத்தில் பாகம்பிரியாள் தெற்கே பார்க்க எழுந்தருளி யிருக்கின்றனர். அர்த்தமண்டபத்தில் பள்ளியறை விளங்குகின்றது. மாமண்டபத்தில் வாயிற் காவலராக அமமையார் இருவரைக் காணலாம். கொடி மண்டபத்திலே வரிசையாக நந்தியும், கொடிமரமும், பலிபீடமும் காணப்படுகின்றன. இனி உட்சுற்றுக்கு வருவோம். கிழக்குச் சுற்றின் அதிகார நந்தியும், திங்களும், ஞாயிறும் இருக்கின்றனர். இதன்கிழக்கில் மடைப்பள்ளி இருக்கிறது. தெற்குச்சுற்றில் தமிழ்ப்பெருந் தலைவர் அகத்தியனாரும், திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகராகிய சமய குரவர் நால்வரும், அப்பமூர்த்திகளும் ஆகிய சமயகுரவரும், மெய்கண்டதேவர் அருணந்திசிவம், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவம் ஆகிய சந்தான குரவர் நால்வரும், காட்சி தந்தருளுகின்றனர். சந்தானாசாரியார்கள் திருக்கோவிலுள் அமைந்த இடம் இந்த ஜில்லாவில் இது ஒன்றுதான். இதன்பின் அம்மை கோவிலில் தெற்கு திருவாசலுள்ளது. பின் சுரதேவரும், காந்தாரியம்மையும், அறுபத்துமூன்று நாயன்மார்களும், மீனாட்சியம்மையும், சோமசுந்தரக்கடவுளும், தெற்கணாமூர்த்தியும் அமர்ந்திருக்கின்றனர். தென்மேற்கில் கன்னிப்பிள்ளையாரும் இருக்கின்றார். மேற்குச் சுற்றில் கலியாணமண்டபம் இருக்கிறது. பிரியாவிடையாளுடன் கூடிய சங்கர இராமேச்சுரனாரும், பாகம்பிரியாளும் (பெரிய செப்புத் திருவுருவங்கள்) ஐம்பெரும் பூத லிங்கங்களும், அருணாசலப் பெருமானும் உள்ளனர். வடமேற்குப்பகுதியில் வள்ளியம்மை தேவயானையோடு கூடிய முருகப்பெருமான் காட்சி தந்தருளுகின்றனர். இவருடைய பெயரால் ஒரு மகமை நடந்துவருகிறது. பூசைக்குரிய சாமான்கள் வைக்கும் அறை முருகனார் திருக்கோவிலுக்குத் தெற்கேயிருக்கிறது. முருகனார் கோவிலில் கருப்பக்

கிரகமும் அர்த்த மண்டபமும் உள. அர்த்த மண்டபத்தில் மயில் இருக்கிறது. இனி வடக்குச் சுற்றுக்கு வருவோம். இதில் முதலில் ஆறுமுகநயினார் வள்ளியம்மை, தேவயானை யுடன் அழகான நாற்கால் மண்டபத்தில் இருக்கின்றனர். ஜலதுர்க்கையும், சண்டேசுரரும், கலைமகளும், திருமகளும், சனியனும் அமர்ந்துளர். அடுத்து வடக்குத் திருவாசல் இருக்கிறது. பின் வேள்விச்சாலையும் இருக்கிறது. ஒன்பது கோளும் (நவக்கிரகமும்) திருமஞ்சனக் கிணறும் உள்ளது. அடுத்து அம்பலவாணர் திருச்சந்நிதி இருக்கிறது. இக் கோவிலிலுள்ள புதுமை என்னவென்றால்: எல்லாச சுற்று மூர்த்திகளுக்கும் அழகான வேலைப்பாடுகள் அமைந்த விமானங்கள் இருக்கின்றன அங்ஙனமே மேலான அழகான விமானததின்கீழ் நாற்கால் கடைசல் சப்பரத்தில் காரைக்கால் அம்மை அடிபணியச் சிவகாமியம்மையாருடன் கூத்தப்பெருமான் எழுந்தருளியுள்ளார். கூத்தனுக்குப் பின்னாக உள்ள சுவரில் புலிக்கால் முனிவரும் பதஞ்சலி யாரும் மாணிக்கவாசகனும் அடிபணியச் சிவபெருமான் திருக்கூத்தாடிச் சிவகாமியம்மையாரை மகிழச் செய்யும் காட்சி ஓவியமாக எழுதப் பெற்றிருக்கின்றது. கூத்தனர் சப்பரத்தில் கிழக்குப்பகுதியில் ஏடுகளுடன்கூடிய பன்னிரு திருமுறைப்பேழை பூசனையில் வைக்கப் பெற்றிருக்கிறது. வடகிழக்கில் வைரவ மூர்த்தி வீற்றிருக்கின்றார்.

## காலம், முழுக்கு.

இங்கே திருவனந்தல், காலசந்தி, உச்சிக்காலம், மாலை வேளை, அர்த்தசாமம் ஆகிய காலங்களில் பூசனை நடைபெறு கிறது. திருவனந்தல் தவிரப் பிற காலங்களில் திருமுழுக் காட்டப்பெறுகிறது.



## ௩. சுற்றுக் கோவில்.

பத்திரகாளியம்மன் கோவில் இதன் சுற்றுக்கோவில். இக்கோவிலுக்குச் சொந்தமான மாப்பிள்ளை ஊரணி என்ற ஊரிலுள்ள பிள்ளையார் கோவிலும் இதன் சுற்றுக்கோவிலே. சில ஆண்டுகளுக்கு முன்பு வரை சித்திரைமாதப் பெருந் திருவிழாவின் கடைசி நாள் பாகம்பிரியாளுடன் பெருமானார் இப்பிள்ளையார்கோவிலுக்கு எழுந்தருளி வந்து கொண்டிருந் தார் என்ற செய்தி கேட்கப்பெறுகிறது.

## ௪. சிற்பச் சிறப்புகள்.

### விமானங்கள், தேர்.

இது அண்மையில் புதுப்பிக்கப்பெற்ற மண்டபங்க ளோடு கூடியது. இதிலுள்ள விமானங்கள் கண் கவரும் வனப்பின. இங்கே கீழத்தேர்த்தெருவில் நல்ல வைரத்தேர் (அழகான தேர்) காணப் பெறுகிறது. கூத்தனுருடைய கடைசல் சப்பரமும், விமானமும் பார்க்கத்தகுந்தன.

### வாகனங்கள்.

பெரிய வெள்ளி இடபவாகனங்கள் இரண்டு, சிறிய வெள்ளி இடபம் ஒன்று. வெள்ளி மயில், இவை வெள்ளி யாலமைந்து வெள்ளி வாகன அறையில் உள. காமதேனு, புருடாமிருகம் கைலாய பருவதம், மயில், குதிரை, பல்லக்கு முதலிய பல மரவாகனங்கள் இருக்கின்றன.

## ௫. புராண வரலாறு.

இவ்வூருக்கு தலபுராணம் என்று ஒரு தனிநூல்இல்லை. ஆனால் இக்கோவில் பற்றியும் இக் கோவிலை ஏற்படுத்தியவர் களைப்பற்றியும் இவ்வூர் திருவாளர் ராமநாத பிள்ளை அவர் களால் " திருமந்திர நகர் தல புராண சங்கிரக வெண்பா " என்னும் ஓர் நூல் 1911-ம்வருடம் இந்நகர் சைவ சித்தாந்த ஆசிரியர் ந சிவகுருநாதபிள்ளை மேற்பார்வையில் அச்சியற்றப்

பட்டிருக்கிறது. 1920-ம் வருடத்தில் இந்நகர் சி. த. நாராயண பிள்ளை அவர்கள் வேண்டுகோளின் பேரில் சேலம், அருட்கவி S. T. வெங்கிட்டராயரால் "தல புராண சங்கிரகப் பாமாலை" என்ற ஒரு நூலும் இயற்றப்பட்டிருக்கிறது. அதற்குப் பின் "பாகம்பிரியாள் அம்மை பிள்ளைத்தமிழ்" என்னும் ஒரு நூல் வரகவி, வீரபாண்டியப்புலவர் என்னும் சங்கரமூர்த்திப்புலவரால் 100 ஆண்டுகளுக்குமுன் இயற்றப்பட்டிருக்கிறது இந்த நூல்களே இக்கோவிலின் வரலாறுகளைத் தெரிந்துகொள்வதற்கு ஆதாரவாக இருக்கிறது. இத்தூத்துக்குடி நகரமானது சேதுக்கரையிலிருந்து (இராமேசுவரம்) வங்காளக்குடாக் கடல்கரை ஓரமாக தெற்கே திருச்செந்தூருக்கு மக்கள் நடந்து போகிற வழிப்பாதையிலிருக்கிறது. தூத்துக்குடியிலிருந்து தெற்கே 24-வது மைலில் திருச்செந்தூர் இருக்கிறது. வடக்கே 70-வது மைலில் இராமேச்சுவரம் இருக்கிறது. முற்காலத்தில் மக்கள் போய் வந்த வழிநடைபாதைக்கு சேதுபாதை என்று பெயரிட்டு அழைக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுதும் அந்தப்பாதை தூத்துக்குடி நகருக்கு வடக்கே இருக்கிற மாப்பிள்ளையூரணி கிராமத்திலிருக்கிறது. கோவிலின் முன்னுள்ள தென்வடல்தெருவிற்கும் சேதுத் தெரு என்று பெயர் வழங்கி வருகிறது. இந்தக் காலத்திலும் பழங்குடி தமிழ் மக்கள் பலர் இவ்வழியாக இராமேச்சுரம் போய்க்கொண்டிருக்கிறார்கள். அவ்வாறே திருச்செந்தூருக்கும் போய்க்கொண்டிருக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் இத் திருமந்திர நகர் ஒரு நெய்தல் நிலமாகவும் நெய்தல் நிலத்தில் ஒரு சோலையாகவும் இருந்திருக்கிறது. சேதுக்கரையிலிருந்து திருச்செந்தூர் வரையுள்ள புண்ணியதீர்த்தக்கட்டங்களில் இதுவும் ஓர் புண்ணிய தீர்த்தக்கட்டமாகயிருந்திருக்கிறது. இந்தப் புண்ணிய தீர்த்தக்கட்டத்திற்கு "வாஞ்சா புஷ்கரணி" என்ற பெயரிட்டு மக்கள் அழைத்திருக்கிறார்கள். (அந்த புண்ணிய கட்டம் இப்பொழுது எங்கே இருக்கிறதென்று தெரியவில்லை. ஒருக்கால் கோவிலுக்கு முன் இருந்து இப்பொழுது நகரமாக ஆகியிருக்குமபோல்தெரிகிறது. வழிப்பாதையாக செல்கின்ற

மக்கள் பலரும் அந்தத் தீர்த்தத்தில் மூழ்கிச் சோலையில் தங்கி திருச்செந்தூருக்கும் சேதுவுக்கும் போயிருந்திருக்கிறார்கள்) பல முனிவர்களும் இவ்வழியே போய் வந்துகொண்டிருந்தார்கள்.

ஒரு காலத்தில் காசிப முனிவர் இங்கு வந்து புண்ணிய தீர்த்தமாடி இந்தச் சோலையில் தங்கினார். பின், குணமென்னும் குன்றேறிநின்ற முனிவர்களான கௌசிகர், கௌதமர், பரத்துவாசர், அத்திரி முதலியவர்கள் திருச்செந்தூருக்குச் சென்று செவ்வேளை வணங்கி இந்தப்பொழிலில் (சோலை) வந்து காசிப முனிவரைக் கண்டார்கள்.

சோலைவளத்தையும், மக்கள்வந்து தீர்த்தமாடிப்போகிற நிலையையும் கண்டு முனிவர்கள் இந்தச் சோலையில் ஒரு சிவலிங்கம் தாபிக்க காசிபமுனிவரைக் கேட்டுக்கொண்டார்கள். காசிப முனிவரும் இசைந்து சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசித்தார். மற்ற முனிவர்களும் கண்டு மகிழ்ந்தார்கள். அந்தப்புண்ணிய மூர்த்தியே திரு சங்கரராமேச்சுரர் ஆவார்.

இந்நகர் திருமந்திரநகர் என்று பெயர் வழங்கும் காரணம்:—

முருகப்பெருமானுடைய திருமணத்தைக்கண்டு களிக்க அம்மை அப்பராகிய பரமசிவனும் பார்வதியும் இங்கு வந்தார்கள். வந்து சோலையில் தங்கினார்கள். அம்மை பரமசிவனைவணங்கி மந்திரம் ஓதித்தரவேண்டுமென்றுகேட்டாள். ஓதிக்கொடுப்பதற்கு கடலோசையும், பனை ஓலையின் ஓசையும், குயவன் சட்டிதட்டுகிற ஓசையும் இடையூறாக இருந்தன. அவைகளை அடக்கி ஆண்டவன் அம்மைக்கு திரு ஐந்தெழுத்தாகிய மூலமந்திரத்தை உபதேசித்தருளினார். அதனால் இந்நகர் திருமந்திரமாநகர் என்று பெயர் வழங்கி வருகின்றது. அதைப்பற்றி 1911-ம் ஆண்டில் இயற்றப்பட்ட “சங்கிரகவெண்பா மாலையில்” உள்ள பாட்டுக்கள்;

தண்டுறைப் பார்க்க தலைவன் சேயாய்த்தோன்றி
எண்டிசையோர் போற்ற மணம் எய்திப்பின்—கண்டுமொழிப்
பார்வதியாள் தானும் பரனுடனே வந்து மந்திர
ஆர்வத்தைப் பெற்றாள் அகம்.

அப்போதெம் அம்மை அரனார் பதம் போற்றி
ஒப்பில்லா மந்திரத்தை ஓதினாள்—செபபக்
கடல்பனையி னோசை கலக்குவதைக் கண்டான்
படல் ஓசை மூன்றென்றான் பார்.

அதைத்தழுவிப் பின்வந்த ஆசிரியர்களான S. T. வெங்கிட்டராயரும், சகைமூர்த்திப்புலவரும் கூறியிருக்கிறார்கள். அதுவும் தவிர தற்காலத்தில் "கந்த லீலையின் காட்சியும், கந்தர் சஷ்டி விரத மகிமையும், சோமாஸ்கந்தமூர்த்திப் பெருமையும்" என்னும் நூல் இயற்றிய கார்வார் திரு பு. சுப்பையா பிள்ளையும் ஆராய்ச்சியுடன் எடுத்துச்சொல்லியிருக்கிறார்கள்.

## சங்கர ராமேச்சுரர் என்று பெயர் வந்ததற்குக்காரணம்.

இவ்வூருக்குச் சமீபமாயுள்ள மணவூரில் சங்கரராம பாண்டியன் என்னும் பெயருடைய குறுநில மன்னன அறநெறியோடு அரசாட்சி செய்து வந்திருக்கிறான். அவனுடைய அரசாட்சி மற்ற அரசர்களெல்லாருக்கும் ஓர் விளக்கொளியாய் இருந்திருக்கிறது. இவனுக்குப பல்லாண்டுகளாக மக்கட்பேறு இல்லை. அதனால் அவன் மிக மிக வருந்தினான். அவன் வருத்தங்கண்ட பெரியோர்கள் காசி முதலிய பலவிடங்களுக்குச்சென்று தீர்த்தமாடி வரும்படி கூறினார்கள். அதனால் அவனும் மனைவியும் மற்றுமுள்ளோரும் பல தீர்த்தங்களாடிக்காசிக்குச்சென்றார்கள். காசியில் கங்கையில் ஆடி, காசி விசுவநாதனை வணங்கினார்கள். மக்களைப்பெற மாதவம் கிடந்தார்கள். அப்பொழுது ஓர் அசரீரி "அரசே, நீ வங்காள குடாக்கடல் பக்கமுள்ள 'வாஞ்சா புட்கரணி' தீர்த்தம் ஆடு. அங்கே ஒரு அடையாளம் காண்பாய். கண்ட இடத்திலுள்ள சிவலிங்கத்தைப் பூசி. மக்கட்பேறு உண்டு." என்று கேட்டது. மன்னவனும்

அது கேட்டு இந்நகர் வந்து சோலை கண்டான். தீர்த்தமாடினான். திருநீற்றுப்பை இருக்கக் கண்டான். கடவுளை வணங்கினான். அப்பொழுது வானில் ஒரு சொல் 'அரசே காசிப முனியால் தாபிக்கப்பட்ட சிவலிங்கப் பெருமானுக்குத் திருக்கோவில் எழுப்புவாயாக' என்று கேட்டது. அரசன் அது கேட்டு ஆண்டவன் அருட்சக்தியை நினைந்துநினைந்து வணங்கினான் சில திங்கள் சோலையில் தங்கினான். மனைவியும் கருக்கொண்டாள். மன்னவனும் மகிழ்ந்தான். கோவில் அமைத்தான். பூசைக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தான். சில கிராமங்களும் இக்கோவிலுக்கு விட்டான். இக்கோவில் அவனால் அமைக்கப்பட்டதால் திரு சங்கரராமேச்சுரர் என்று அழைக்கப்பட்டு வருகிறது இவனால் விடப்பட்ட கிராமம் இன்னும் மாப்பிள்ளை ஊரணிக்கிராமம் என்று தெரிகிறது. இக்கோவிலை இராமனும் அநுமானும் பூசித்ததாகவும் தெரிகிறது.

## திருப்பணி.

இக்கோவில் ஆதியில் சிறிய கோவிலாக அமைந்திருந்தது. அதை இவ்வூர் பெருமக்கள் கண்டு பெரிய ஆலயமாக பணி செய்ய ஆரம்பித்தார்கள். பல செல்வர்களும் ஒவ்வொரு பகுதியை எடுத்துத் திறம்பட பணி செய்துள்ளார்கள். அவைகளின் விபரம்:— இவ்வூர் பெருஞ்செல்வர் திரு சிவ. சின்னக்கண்ணுப்பிள்ளை அவர்கள் 1075-ம் ஆண்டில் கல்யாண மண்டபம் அமைத்தார்கள். 1085-ம் ஆண்டில் பஞ்சுக்கிட்டங்கி வணிகர்களான ரு. ம. அ. சு. பச்சைப் பெருமாள் பிள்ளை 1, ஆ. மு. சுப்பிரமணிய பிள்ளை 2, அ. செ சுப்பா செட்டியார் 3, க. கா. லெ. லெட்சுமணஞ் செட்டியார் 4 இவர்கள் சாமிகோவில் கெர்ப்பக்கிரகமும், அர்த்தமண்டபமும் அமைத்தார்கள். பாகம்பிரியாள் கெர்ப்பக்கிரகமும், அர்த்தமண்டபம், பள்ளியறை, மகா மண்டபம், தெற்கை பார்க்க உள்ள வாசல்களும் திரு. சிவ. நல்ல பெருமாள்பிள்ளை அவர்கள் அமைத்தார்கள். சிவ. அருணாசலப்பிள்ளை நடராசர் கெர்ப்பக்கிரகம், விமானம் முதலியவை

களும் அமைத்தார்கள். 1085-ம் ஞூ தூத்துக்குடி, கொழும்பு வர்த்தகர்கள் தங்கள் மகமையிலிருந்து சுப்பிரமணியசுவாமி கெர்ப்பக்கிரகமும், முன்மண்டபமும் அமைத்தார்கள். வாடித்தெரு, வ. அ. ஆதிநாராயணன் செட்டியார் ஆறுமுகநயினர் கெர்ப்பக்கிரகமும அமைத்தார்கள். கோவில் முன் மண்டபங்களும், சமயாச்சாரியாருக்கு மண்டபமும், நவக்கிரக மண்டபமும் நவக்கிரக பிரதிஷ்டையும் இவ்வூர் க. யீ. ப. திரவியம் பிள்ளை 1, க. யீ. ப. வெங்கிடாசலம்பிள்ளை 2, க யீ சுப்பையாபிள்ளை 3 இவர்கள் குடும்பநதியிலிருந்து அமைத்தார்கள். நந்தி இருக்கும் இடம், பலிபீடம் இவைகள் சிவ. பழனிக்குமாருப்பிள்ளை வகையறுவால திருப்பணி செய்யப்பட்டது. புரோக்கர்களால் மதில்சுவர்கள் அமைக்கப்பட்டது. சைவப்பிரகாச அச்சியந்திரசாலை அதிபர்களில் ஒருவரான தி. சொ. நமசிவாயம்பிள்ளையால் 63 நாயன்மார் மண்டபமும் பணி செய்து பிரதிட்டையும் செய்யப்பட்டிருக்கிறது. அரனார் மகனுநக்கு ஆலயமும் வகுத்துள்ளார்கள். மொத்தம் ஒரு இலக்கம் ரூபாய்க்குமேல் திருப்பணி நடந்திருக்கிறது.

## திருப்பணியின் சிறப்பு.

ஒவ்வொரு சுற்றுக்கோவில் மூர்த்திக்கும் விமானங்கள் அழகாக அமைக்கப்பட்டு, கோவில் மிக வெளிச்சமுள்ளதாய், சுகாதாரத்திற்கு அனுகூலமுள்ளதாய் கண்டார் மனதைக் கவரும் தன்மையதாய் அமைந்திருக்கிறது.

## செய்யவேண்டிய திருப்பணிகள்.

சுமார் 100 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டுள்ள ஓட்டுக்கொட்டகையை கல்மண்டபமாக அமைக்கவேண்டும். தேவார பாடசாலைக்கும், வாசகசாலைக்கும், நந்தனவனத்தில் ஓர் கட்டிடம் கட்டவேண்டும். கோவில் காரியங்களுக்கு தண்ணீர்க் குழாய் அமைக்கவேண்டும் இவைகள் மிகவும் இன்றியமையாதவைகள். இவைகளை நிறைவேற்றிக் கொடுத்து பொதுமக்கள் சிவ புண்ணியத்தை அடைவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## தற்காலம் செய்துள்ள பணிகள்

இக்கோவில் பணிக்காக இந்து மத அறநிலையத்தார், தென்காசி, திரு. ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளையை அறநிலையப்பணியாளராக (டிரஸ்டியாக) 1943-ம் வருடம் ஜூன் மாதம் 9-ம் நாள் நியமுகம் செய்துள்ளார்கள். அறநிலையப் பாதுகாப்பு சபை (H. R. E. Board) தலைவர் திரு. T. M. நாராயணசாமி பிள்ளை அவர்கள் பார்வையில் திருநெல்வேலி ஜில்லா டிவிஷன் கமிஷனர் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரன் செட்டியார் B A., B. L, F R. G. S. அனுப்பிய சுற்றறிக்கையின்படி டிரஸ்டி திருக்கோவிலில் சமய நால்வர் திருவுருவப்படம் அமைத்து மிக அழகாக பன்னிரு திருமறைகளும் திருக்குறள்களும் எழுதும்படி செய்திருக்கிறார்கள். சேக்கிழார் நூல்நிலையமும் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

## இவ்வூரிலுள்ள சபைகள்.

இவ்வூரில் மக்களுக்கு சமய, சமூக ஒழுக்கங்களைப் போதிப்பதற்காக பல சபைகளும், கழகங்களும் மடங்களும் இருந்திருக்கிறது. இவைகளில் பல ஆண்டுகளாக இருந்து இப்பொழுதும் மக்களுக்கு அறிவுரைகளைப் போதித்து வருவது சைவ சித்தாந்த சபை. இதற்கு இப்போது வயது அறுபது ஆகிறது இந்தச்சைவசபை தமிழ் மக்களின் சைவ சபைகளுக்கெல்லாம் ஓர் தாய்ச்சபையாக விளங்குகின்றது.

## தெப்பக்குளம்.

கோவிலிலிருந்து நேர் வடகிழக்கிலிருக்கிறது. இந்தத் தெப்பக்குளத்தை வெட்டியவர்கள்:- இந்நகரிலுள்ள செல்வத்தில் சிறந்த மு. சுப்பராய பிள்ளை அவர்கள். தெப்பக்குளத்தின் பக்கம் ஒரு சுந்தரபாண்டிய விநாயகர் கோவிலும் அமைத்திருக்கின்றார்கள். அந்தத் தெப்பக்குளம் தற்சமயம் முனிசிபாலிட்டியார் ஆளுகையிலிருக்கிறது. ஒவ்வொரு ஆண்டு தைத்திங்கள் பூச நன்னாளில் சங்கரராமேச்சுரருக்கும் பாகம்பிரியாள் அம்பிகைக்கும் தெப்ப உற்சவம் சிறப்பாக நடக்கிறது.

## மடங்கள்.

இத்திருக்கோவிலின் முன்னிருக்கிற தெருவில் வடபுறம் ஓர் பூசை மடம் அக்காலத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. தற்சமயம் அந்த மடம் ஓர் ஓய்வு விடுதி (Rest House) ஆக விளங்குகிறது. அம்மடம் எப்படியோ முனிசிபல் ஆளுகைக்குள் போய்விட்டது. அந்த மடம் பெரியோர்கள் பூசை செய்வதற்காகவே முன்னிருந்த முதறிஞர்களால் கட்டப்பட்டிருக்கவேண்டும் அதனுடைய உண்மை வரலாறு நன்றாய்த் துலங்கவில்லை. கோவிலுக்கு வடக்கே வடக்கு ரத வீதியில் திருஞானசம்பந்தர் மடாலயம் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் சைவ வேளாளர்களால் கட்டப்பட்டு அதில் நாயன்மார் குருபூசைகளும் சைவ சித்தாந்த சபையும் நடந்துவருகிறது. சபை ஆண்டுவிழாக்கள் இந்த மடத்திலும் இதை ஒட்டியுள்ள இடத்திலும் நடந்து வருகிறது. கீழூரில் வாடித்தெருவுக்கு சமீபமாக திருநாவுக்கரசர் மடம் என்று ஒன்று இருக்கிறது. அது சைவ மக்களால் நடத்திவரப்படுகிறது. இனியும் இவ்வூர் திரு லெ. சுப்பையாபிள்ளை அவர்களால் தேவாரப் பணிக்கு என்று கொஞ்சம் நிதி திரட்டி வைத்து ஒவ்வொரு ஆண்டுச் சித்திரைத் திருநாளிலும் தமிழ்மறை ஓதச்செய்து வருகிறார்கள். சொத்துக்களும் கோவில் பேருக்கு வாங்கி வைத்திருக்கிறார்கள். பன்னிரு திருமறை விழாவும் நடத்தி வருகிறார்கள்.

## ௬. திருவிழாக்கள்.

இக்கோவிலில் பிரமோற்சவம் ஒவ்வொரு ஆண்டு சித்திரைத்திங்களிலும் பூர்வபட்சத்தில் மிருகசீரிட நன்னாளில் கொடியேற்று விழா ஆரம்பமாகி சித்திரை நன்னாளில் நிரம்பும். ( துவஜா அவரோகணம் ) 11-ம் நாள் தீர்த்தவாரி நடைபெறும். சித்திரைத்திங்கள் 1-ம் நாள் அன்னாபிஷேகம் ஸ்ரீ ஆறுமுகப்பெருமானுக்கு நடைபெறும். வைகாசித் திங்களில் ஸ்ரீ சுப்பிரமணியருக்கு விசாக விழா நடைபெறும். புரட்டாசித் திங்களில் நவராத்திரி விழா

9 நாள் நடைபெறும். 10-ம் நாள் பாரிவேட்டை நடைபெறும். ஐப்பசித் திங்களில் திருக்கலியாணத் திருநாள் நடைபெறும். ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு கந்தசட்டித் திருநாள் நடைபெறும். கார்த்திகைத்திங்களில் சோமவாரம் நடைபெறும் கார்த்திகை நன்னாளில் கார்த்திகை தீபம் சுவாமி அம்பாள் வீதிவலம் வருதலும் நடைபெறும். மார்கழித் திங்களில் திருப்பள்ளி எழுச்சி விழாவும் திருவெம்பாவை உற்சவமும், திருவாதிரை விழாவும் நடைபெறும். தைத் திங்கள் புனர்பூச நன்னாளில் வருஷாபிஷேகம் நடைபெறும். தைத்திங்கள் பூச நன்னாளில் தெப்ப உற்சவம் நடைபெறும். தைத்திங்கள் விசாக நன்னாளில் ஸ்ரீ ஆறுமுகநயினார் அபிஷேகம் நடைபெறும். மாசித்திங்களில் சிவராத்திரி விழா நடைபெறும். பொதுவாக இவ்வூர் பெருமக்களால் சிறப்பாக மண்டகப்படிகள் நடைபெற்று வருகின்றன. திருக்கல்யாணத் திருநாள் இவ்வூர் பஞ்சுக்கிட்டங்கி வர்த்தகர்களால் நடத்தப்பட்டு வருகிறது. கந்தர்சட்டித் திருநாள் தூத்துக்குடி, கொழும்பு வெங்காயக்கிட்டங்கி வர்த்தகர்களால் ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி மகமை பரிபாலன சங்கத்திலிருந்து நடத்தப்பட்டு வருகிறது. மகமை சங்கத்தார் நாள்தோறும் முருகப்பெருமான் பூசைக்கு வேண்டிய நிபந்தங்களும் செய்துள்ளார்கள்.

ஒவ்வொரு மாதம் கடைசி வெள்ளிக்கிழமைகளிலும் முருகப்பெருமான் எழுந்தருளுதல் நடைபெறுகிறது.

## எ. வரவு செலவு.

இக்கோவிலின் பசலி 1353-ன் திட்டப்படி வரவும் செலவும் பின் வருவன:

வரவு.

| | |
|---|---|
| மிட்டாவிலிருந்து பணத்தீர்வையும் குத்தகையும், நஞ்சை நிலங்களிலிருந்து நெல்லும் | ரூ. 5648—0—0 |
| வீட்டு வாடகை | ... 1600—0—0 |

| | | |
|---|---|---|
| அருச்சனை | ரூ. | 400—0—0 |
| பிற | ... | 427—0—0 |
| காணிக்கை முதலியன | ... | 645—0—0 |
| ஆக மொத்தம் | | 8720—0—0 |

செலவு

| | | |
|---|---|---|
| பணியாள் | ரூ. | 2534—0—0 |
| படித்தரம் | .... | 2185—0—0 |
| திருவிழா | ... | 1580—0—0 |
| தீர்வை | ... | 775—0—0 |
| கல்வி | ... | 300—0—0 |
| காப்புக்கழகமும் தணிக்கையும் | ... | 300—0—0 |
| தேவாரப்பள்ளி | ... | 120—0—0 |
| பிற | ... | 501—0—0 |
| காப்பு நிதி | ... | 425—0—0 |
| ஆக மொத்தம் ரூ. | | 8720—0—0 |

## இக்கோவிலின் சொத்து விபரங்கள்.

இக்கோவிலுக்கு மாப்பிள்ளை ஊரணிக்கிராமம் என்ற ஒரு மிட்டா கடற்கரை ஓரமாக இருக்கிறது. இதிலிருந்து பனைத்தீர்வைகளும் இனி, நிலக்குத்தகைகளும் வந்துகொண்டிருக்கின்றன. இந்த கிராமத்தின் மொத்த விஸ்தீரணம் ஏக்கர் 2400. மேற்படி நிலங்கள் பூரவும் மணற்பாங்கான இடம். கடற்கரையோரமாக உப்புப் பாத்திபோடத் தகுதியுள்ள ஏராளமான இடங்களிருக்கின்றன. அதன் பக்கத்தில் எட்டயபுரம் ஜமீனுக்குப் பாத்தியப்பட்ட இடங்களும் அரசடி உப்பு தொழிற்சாலையும் (Salt Factory Arasadi) இருக்கின்றன. (2) பாளையங்கோட்டையில் ஏக்கர் 4 சென்டு 9 உள்ள நஞ்சை நிலமும், சீவைகுண்டம் தாலூகா பெருங்குளத்தில் 1 கோட்டை 12 மரக்கால் 4 படி நஞ்சை நிலமும்

இருக்கிறது (3) கட்டிடங்கள்: கோவில் முன்னும் பெருமாள் கோவில் வீதியிலும், வடக்கு சேது தெருவிலும் 21 வீடுகள் இருக்கின்றன. பெரிய காட்டன் ரோட்டில் தபசு மண்டபம் என்று ஒரு மண்டபம் இருக்கிறது. அதற்குப் பின் காலிமனையும் சில்லரைக்கடைத்தெருவுமிருக்கின்றன.

காலிமனைகள்: வடக்கு சேது தெருவில் சி. வ. ந. அவர்கள் வீட்டுப்பக்கம் இருக்கிற காலிமனை ஒன்று. இனி அதற்குத்தென்புறமுள்ள காலிமனை ஒன்று. பத்திரகாளி அம்மன் கோவில் தெருவில் ஒரு காலிமனை, இன்னாசியார் புரத்தில் T. S 4796 நம்பரில் 5 ஏக்கர் 43 செண்டு காலிமனை. இனி புது கிராமத்திற்குப் போகிற வழியில் இருக்கிற காலிமனை ஒன்றும். (கடைசியாகச்சொன்ன காலிமனை சாசுவதக்கட்டுக்குத்தகைக்கு விடப்பட்டிருக்கிறது.)

## ௮. ஆட்சி.

சென்னை, இந்துமத அறநிலையக்காப்புக்கழகம் ஆளுகையில் இக்கோவில் இருந்துவருகிறது. 5—7—44 ல் ஸ்கீம் ஏற்பட்டிருக்கிறது

## ௯. இலக்கியம்.

### நூல்கள்.

தூத்துக்குடி, வரகவி. வீரபாண்டியப்புலவர்பெருமான் பாடிய **பாகம்பிரியாள் பிள்ளைத்தமிழ்** மிகவும் இனியபொருள் செறிந்த அருமையான நூல். இப்புலவர் சங்கரமூர்த்திப் புலவர் என்றும் அழைக்கப்படுவார்.

### நூல் நிலையமும் தேவாரப் பாடசாலையும்.

சேக்கிழார் நூல் நிலையம், அண்மையில் தோன்றி இருக்கிறது. உயர்திரு அம்பலவாணதேசிகர் தேவாரப்பாடசாலை சைவ சித்தாந்த சபையாரால் நடத்தப்பெறுகிறது. கோவில் இடமும் ஒரு பகுதி பொருளும் தந்துவருகிறது.

## ஆபரணங்கள்.

தற்கால விலைக்கு சுமார் ரூபாய் பதினாயிரம் பெறுமான நகைகள் இருக்கின்றன.

## வெள்ளி வாகனங்கள்.

இடப வாகனம் இரண்டும், மயில் வாகனம் ஒன்றும், சிறிய பிரதோட நந்தி வாகனம் ஒன்றுமிருக்கின்றன.

## நந்தவனம்.

கோவிலுக்குப் பின்னும் வடபுறமும் தென்புறமும் ஓர் பெரிய நந்தவனம் இருக்கிறது. அந்த நந்தவனத்தின் தென்புறம் மேல் மூலையில் ஓர் கன்னி விநாயகர்கோவில் இருக்கிறது. நந்தவனத்திற்குத் தென்புறம் சீவைகுண்டபதி பெருமாள்கோவிலும் இருக்கிறது.

சைவம் ஓங்குக! தமிழ் வளர்க!

பாடவேண்டும் நான்போற்றி நின்னையே
பாடிநைந்து நைந்துருகி நெக்குநெக்
காடவேண்டும் நான்போற்றி அம்பலத்
தாடுநின் கழற்போது நாயினேன்
கூடவேண்டும் நான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீடவேண்டும் நான்போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே.

## திருக்குறள்.

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

—திருவள்ளுவர்.